மலர் 14 இதழ் 56

REGD NO M 7897

NAVAMANI (Tamil Daily) MADRAS.

Phone No. 76190, 76199

4 பக்கம் 15 காசு விமானப்பதிப்பு 18 காசு

# நவமணி

கூட்டுறவு முறையில் தொழிலாளர்கள் நடத்தும் ஒரே தமிழ்த் தினசரி

சென்னை 7-11-73 புதன் — வெளியூர் 8-11-73 வியாழன்

எம். ஜி. ஆர்.
ஆணி வேர்:
காளிமுத்து சல்லி வேர்
—2ம் பக்கம்



## சீனிவாசன் பேசியது என்ன?

# விசாரணை ஆரம்பம்

## நீலநாராயணன் ராமநாதபுரம் சென்றார்

சென்னை, நவ, 7—துணை சபாநாயகர் பி. சீனிவாசன் விவகாரம் குறித்து தி. மு. கழக மேலிடம் நியமித்துள்ள ஒரு நபர் விசாரணைக் குழு இன்று விசாரணையைத் துவங்குகிறது.

சீனிவாசன் பிரச்சினையை விசாரிக்க திமுக அமைப்புச் செயலாளரான நீல நாராயணனை மேலிடம் நியமித்திருப்பது தெரிந்ததே.

அதன்படி நீலநாராயணன் இன்று விசாரணை வேலையைத் துவக்கினார்.

### விசாரணை ஏன்?

துணை சபாநாயகரான சீனிவாசன் ராமநாதபுரம் மாவட்டத்தில் தி மு கழகத்திற்கு விரோதமாகப் பேசினாரா? அதை யொட்டி ராமநாதபுரம் மாவட்ட தி மு கழகக் கூட்டத்தில் நிறைவேற்றப்பட்ட தீர்மானம் என்ன என்பதை நீலநாராயணன் கண்டறிவார்.

விசாரணையின் முதல் கட்டமாக ராமநாதபுரம் மாவட்டத்திற்கு இன்று நீலநாராயணன் சென்று விசாரணையைத் துவக்கினார்.

ராமநாதபுரம் மாவட்ட செயலாளர் மற்றும் மாவட்டக்குழு உறுப்பினர்களையும் சந்தித்து விசாரிப்பார்.

தி. மு. கழகத்திற்கு குந்தகம் விளைவிக்கும் வகையில் சீனிவாசன் பேசியதாக பத்திரிகையில் வந்த செய்தி பற்றியும்—அப்படி அவர் பேசினாரா என்பது பற்றியும் நீலநாராயணன் விசாரிப்பார்.

### 3 நாட்கள்

3 நாட்கள் அங்கே தங்கியிருந்து விசாரணையை நடத்துவார்.

அதன்பிறகு சென்னை திரும்பிய பிறகு துணை சபாநாயகர் சீனிவாசனையும் சந்தித்து இது பற்றி அவரது கருத்துக்களையும் கேட்டறிவார்.

சீனிவாசனை விசாரித்த பிறகு நீலநாராயணன் தனது அறிக்கையை தி மு கழக மேலிடத்திற்கு இம்மாதமுடிவிற்குள் கொடுப்பார் என்று எதிர்பார்க்கப்படுகிறது.

## பெண்கள் மீது பாரபட்சம்: இந்திரா வருத்தம்

புதுடெல்லி, நவ. 7—ஓட்டுரிமை பெறுவதிலும் சொத்துரிமை பெறுவதிலும், சரிசம ஊதியம் பெறுவதிலும் அநேகமாக உலகெங்கிலும் பெண்கள் பிரமாத அரசியல் வெற்றிகளைப் பெற்றுள்ள போதிலும், சட்ட ரீதியில் அவர்களுக்கு அளிக்கப்பட்டுள்ள சமத்துவம் நடைமுறையில் நேர்மைக்கான முறையில் மறுக்கப்பட்டு வருகிறது என்று பிரதமர் இந்திரா காந்தி கூறினார்.

டெல்லியில் சர்வதேச பெண்கள் சங்கத்தின் 23வது மாநாட்டை பிரதமர் இந்திரா காந்தி இன்று துவக்கி வைத்துப் பேசுகையில் இவ்வாறு கூறினார்.

"சமத்துவமும், வாழ்க்கையில் முன்னேறுவதற்கான வாய்ப்புகளும் ஒரு சிலருக்குக் கிடைத்துள்ள போதிலும், பெண்களில் பெரும்பாலோருக்கு இன்னமும் பல தடைகள் உள்ளன" என்றார் இந்திரா.

"பெண்கள் பொருளாதார ரீதியில் மற்றவர்கள் அண்டி வாழ்பவர்களாகவும், பழக்க வழக்கம், சம்பிரதாயம் ஆகியவற்றுக்கு இலக்காகிறவர்களாகவும் தொடர்ந்து இருந்துவருகின்றனர் என்றும் இந்திரா குறிப்பிட்டார் எண்ணிக்கையில் இல்லாவிட்டாலும் பெண்கள் ஒரு வகையில் மிகப் பெரிய மைனாரிட்டியினராக உள்ளனர்."

"பெண்கள் தங்களுடைய உரிமைகளைப் பெறப் போராடுவதன் மூலமும், தங்களுடைய சொந்த எதிர்காலத்தை நிர்ணயித்துக்கொள்வதன் மூலமும்தான், தங்கள் முன்னேற்றத்துக்கு உள்ள தடைகளை அகற்றமுடியும்."

"சமூக அரசியல் உரிமைகளைப் பெற பெண்களின் இப்போராட்டத்தை சமூகத்தில் நெடுங்காலமாக அழுத்தி வைக்கப்பட்டுள்ள பல பிரிவினரின் போராட்டத்தின் ஒரு பகுதியாகவே நான் காணுகிறேன்" என்றார் இந்திரா காந்தி.

இந்தியா துவக்கி வைக்கும் இந்த மாநாடு ஒருவாரம் நடக்கும். 25 நாடுகளின் பிரதிநிதிகளாக 250க்கும் மேற்பட்ட பெண்கள் கலந்து கொள்கின்றனர்.

## தி. மு. க. எம். எல். ஏ. சஸ்பெண்ட்

சென்னை, நவ. 7— சட்டமன்ற உறுப்பினர் கோவை செழியன் இன்று தி மு கவில் இருந்து சஸ்பெண்ட் செய்யப்பட்டார்.

கட்சிக்கு விரோதமான நடவடிக்கைகளில் ஈடுபட்டதற்காக கோவை செழியன் சஸ்பெண்ட் செய்யப்பட்டிருக்கிறார்.

கோவை செழியன் சஸ்பெண்ட் செய்யப்பட்டது சம்பந்தமாக, தி. மு. க. பொதுச்செயலாளர் ஒரு அறிக்கை வெளியிட்டிருக்கிறார். அதில் குறிப்பிட்டிருப்பதாவது:—

சட்டமன்ற உறுப்பினர் கோவை செழியன் அண்மைக் காலமாக கட்சிக் கட்டுப்பாட்டையும் ஒழுங்கையும் மீறும் வகையிலும் கழகத் தோழர்களிடையே பிளவு உண்டாக்கும் வகையிலும் கழகத்தின் கண்ணியத்துக்கு மாசு உண்டாக்கும் வகையிலும் செயல்பட்டு வருவதாகவும், கழக சட்டதிட்ட விதி 32 பிரிவு 2ன்படி ஒழுங்கு நடவடிக்கை எடுக்கக் கூடிய செயல்களில் ஈடுபட்டு வருதாலும், இவைகளைச் சுட்டிக்காட்டி, அவர்மீது உடனடியாக நடவடிக்கை எடுக்க வேண்டும் எனக் கேட்டுக்கொண்டு, கோவை மாவட்ட தி மு க பிரதிநிதிகள் கூட்டத்தில் ஏகமனதாக முடிவுசெய்து தலைமைக் கழகத்துக்கு செய்

(6ம் பத்தி பார்க்க)

## கணக்குக் கேட்ட விவகாரம்

# திண்டுக்கல் தேர்தல் நிதி: திருச்சி அ.தி.மு.க.வில் பிளவு

திருச்சி, நவ, 7—திண்டுக்கல் தேர்தல் நிதி கணக்கு கேட்ட விவகாரத்தின் எதிரொலியாக திருச்சி அ. தி. மு. க. வில் பெரும் பிளவு ஏற்பட்டிருக்கின்ற செய்தி கிடைத்துள்ளது.

திருச்சி மாவட்ட அ. தி. மு. க. அமைப்பாளரான கே. சவுந்தரராஜனை அக்கட்சியிலிருந்து விலகக் கோரி 22 அ. தி. மு. க. தொகுதி அமைப்பாளர்கள் போர்க்கொடி உயர்த்தியுள்ளனர். தகுந்த நடவடிக்கை எடுக்கவில்லை என்றால் அவர்கள் அனைவரும் கட்சியை விட்டு விலகுவதாகத் தெரிவித்துள்ளனர்.

சமீபத்தில் சென்னையில் நடந்த அ தி மு க அமைப்பாளர்கள் அவமதிக்கப்பட்டதாகவும் இதனால், திருச்சி மாவட்டத்தைச் சேர்ந்த 22 அதிமுக அமைப்பாளர்கள் எம் ஜி ஆருக்கு கண்டனம் தெரிவித்திருந்தது தெரிந்ததே.

அவர்கள் எம். ஜி ஆரிடம் தெரிவித்துள்ள குற்றச்சாட்டுகளில் முக்கியமாக திருச்சி மாவட்டத்தில், திண்டுக்கல் தேர்தல் நிதி திரட்டியதற்கு கணக்குக் கேட்டு, இதன் காரணமாக திருச்சி மாவட்ட அ. தி. மு. க. அமைப்பாளர் கே. சவுந்தரராஜனை விலக்க வேண்டும் என்று கோரியிருக்கிறார்கள்.

திண்டுக்கல் தேர்தலுக்காக திருச்சி நகரத்தில் தேர்தல் நிதி கூட்டம் நடைபெற்றது. இதையொட்டி திருச்சியில் நடைபெற்ற பொதுக்கூட்டத்தில் எம். ஜி. ஆர் கலந்து கொண்டு பேசியதும் தெரிந்ததே.

திருச்சியில் திண்டுக்கல் தேர்தல் நிதி திரட்டியது எவ்வளவு என்ற கணக்கை திருச்சி மாவட்ட அ தி மு க தொகுதி அமைப்பாளர்கள் கேட்டனர்.

இதுவரை மாவட்ட அமைப்பாளரான சவுந்தரராஜன் கணக்கைக் காட்டவில்லையாம்.

இதுபற்றி, சென்னையில் நடந்த அ தி மு க ரகசியக் கூட்டத்திலும் பிரச்னை கிளப்பட்டதாகத் தெரிகிறது.

இது குறித்து இதுவரை எந்த விதமான நல்ல பதிலும் கிடைக்காததனால், திருச்சி மாவட்டத்தைச் சேர்ந்த 22 அ தி மு க அமைப்பாளர்கள், மாவட்ட அமைப்பாளர் சவுந்தரராஜனை கட்சியை விட்டு விலக்கு வோம், அல்லது நாங்கள் விலகுவோம் என்றும் எம். ஜி. ஆருக்கு கடிதம் எழுதியிருக்கிறார்களாம்.

இந்த சிக்கலான பிரச்னையை எப்படித் தீர்ப்பது என்று எம். ஜி. ஆர். தீவிரமாக ஆலோசித்து வருவதாகத் தெரிகிறது.

## ஆந்திராவின் புதிய முதல்வர்: இந்திரா முடிவுசெய்வார்

ஹைதராபாத், நவ, 7—ஆந்திராவின் புதிய முதல்வர் யார் என்று முடிவு செய்வதை பிரதமர் இந்திராவிடம் விட்டுவிடுவதென்று ஆந்திரா புது காங்கிரஸ் கட்சியினர் முடிவு செய்துள்ளனர்.

புது காங்கிரஸ் கட்சித் தலைவர் சங்கர்தயாள் சர்மா, மத்திய மந்திரி கே. சி. பந்த் ஆகியோருடன் நடத்திய பேச்சுகளின் போது ஆந்திர காங்கிரஸ் கட்சியினர் இவ்விதம் ஒருமித்த கருத்து தெரிவித்தனர்.

எனினும் முன்னதாக இக்கூட்டத்தில் பி. வி. நரசிம்மராவ் மறுபடி முதல்வராக்கப்படவேண்டும் என்று ஒரு பிரிவினரும், புதிதாக ஒரு முதல்வர் தேர்ந்தெடுக்கப்படவேண்டும் என்று மற்றொரு பிரிவினரும் கருத்து தெரிவித்தனர். புதிய முதல்வரைத் தேர்ந்தெடுக்க வேண்டும் என்று கூறியவர்கள் என். ராமச்சந்திர ரெட்டி, வெங்காளா ராவ், சொக்கா ராவ், வி. பி. ராஜு ஆகியோரின் பெயர்களைக் கூறினர்.

இம்மாதக் கடைசிவாக்கில் ஆந்திராவில் புதிய மந்திரி சபை அமைக்கப்படலாம்.

## 'ராஜராஜ சோழன்' கணக்கு விவகாரம்

# சிவாஜி ரசிகர்-காங்கிரஸ் ஊழியர்கள் அடிதடி: திண்டுக்கல்லில் பரபரப்பு

திண்டுக்கல், நவ. 7—திண்டுக்கல்லில் நடைபெற்ற பழைய காங்கிரஸ் ஊழியர்கள் கூட்டத்தில் பெரும் குழப்பம் ஏற்பட்டது; ஒருவரை ஒருவர் அடித்துக்கொண்டதாகவும் கூறப்படுகிறது.

ராஜராஜசோழன் சினிமா கணக்கு சம்பந்தமாகவே இந்த மோதல் ஏற்பட்டிருக்கிறது.

கடந்த 3ம் தேதி காலை 10-30 மணியளவில் நடைபெற்ற இந்த ஆலோசனைக் கூட்டத்திற்கு சிவாஜி மன்றத் தலைவர் இராஜசேகரன் தலைமை வகித்தார்.

இளைஞர் காங்கிரஸ், மாணவர் காங்கிரஸ், சிவாஜி மன்றம், மற்றும் காங்கிரஸ் ஊழியர்கள் இதில் கலந்து கொண்டனர்.

இந்த மாதம் 25ம் தேதி அறப்போர் வீரர்களுக்குப் பாராட்டுக் கூட்டம் நடைபெற விருக்கிறது.

இதில் காமராஜர் கலந்து கொள்கிறார்.

### கணக்கு எங்கே?

கடந்த மாதம் 30ம் தேதி திண்டுக்கல் டவுன் காங்கிரஸ் கமிட்டி கூட்டம் நடைபெற்றதாகவும், அந்தக்கூட்டத்தில் ராஜராஜன் கணக்கு எங்கே என்று தரம் கேட்டதாகவும், தலைமை வகித்த ராஜசேகரன் தெரிவித்தார். அதற்கு காங்கிரஸ் கூட்டத்தில் பதில் சொல்லவில்லை என்றும் ராஜசேகரன் கூறினார்.

### குழப்பம்

இதை ஒட்டி குழப்பம் ஏற்பட்டது.

ஜெயராம் என்ற ஊழியர் ஒருவர் எழுந்து ராஜராஜன் படத்தை டவுன் கமிட்டிக்கு கொடுக்க உங்களுக்கு என்ன அதிகாரம் என்று கேட்டாராம். இதை அனைத்து சிவாஜி மன்றங்களையும் கலந்து செய்தீர்களா என்றும் கேட்டிருக்கிறார்கள். 6 சிவாஜி மன்றங்களைக்கலந்து கொண்டுதான் கொடுத்ததாக ராஜசேகரன் பதிலளித்தார்.

உடனே மற்றொரு ஊழியர் எழுந்து 6 மன்றங்கள் தான் உள்ளதா? மற்ற மன்றங்களை அழைத்து ஏன் பேசவில்லை என்று கேட்டார்.

### பேசாதே!

வி. ஜான்சன் என்ற இளைஞர் காங்கிரஸ் அமைப்பாளர் இதற்குப் பதிலளிக்க எழுந்தார். அவரை பேசக்கூடாது என்று ஒருவர் சொன்னார். இதையொட்டி ஒருவருக்கொருவர் வாய்க்குவந்தவாறு பேசினார்களாம்.

வாய்ப்பேச்சு முற்றி ஒருவரை ஒருவர் அடித்துக்கொண்டதாகவும் கூறப்படுகிறது. இதனால் பலர் கூட்டத்தை விட்டு வெளியேறிச் சென்றனர்.

தகவல் போலீசுக்கு தெரிவிக்கப்பட்டது.

போலீசார் வந்து கூட்டத்தினரை கலைந்து போகுமாறு கூறினர்.

### பரபரப்பு

ராஜ ராஜன் வரவு செலவுக் கணக்கு சம்பந்தமாக இரு சாராருக்கும் ஏற்பட்ட இந்த அடிதடிக் கலவரம் நகரில் பெரும் பரபரப்பை ஏற்படுத்தியிருக்கிறது.

சம்பவத்துக்கு பிறகு வரவு செலவு கேட்ட கோஷ்டியினர் 80 பேர் தனி சட்டம்போட்டு, வசூல் கணக்கு உடனே காட்ட வேண்டும் என்றும், இது குறித்து நகர காங்கிரஸ் தலைவர் சுப்பையா மீதும், செயலாளர் வீரையா மீதும் நடவடிக்கை எடுக்கவேண்டும் என்றும் கோரி தீர்மானம் நிறைவேற்றியிருக்கின்றனர் என்று ஊழியர் ஒருவர் தெரிவித்தார்.

சம்பவம் குறித்த தகவல்கள் மாவட்ட, மாநில காங்கிரஸ் தலைவர்களுக்கு தந்திமூலம் அனுப்பப்பட்டிருக்கிறது.

### பிளவு

இந்தத் தகராறால், காங்கிரஸ்கட்சி இரண்டு கோஷ்டிகளாகப் பிரிந்துவிடுமோ என்ற அச்சம் ஏற்பட்டிருக்கிறது.

ஆலோசனைக் கூட்டத்தகராறை ஒட்டி காங்கிரஸ் ஊழியர் ஒருவர் தாக்கப்பட்டிருக்கிறார்.

பிச்சை என்பவர் வீட்டுக்குச் சென்று கொண்டிருந்த போது அவரை 50பேர் கூடி நின்று கம்பு, அரிவாள், சைக்கிள் செயின் ஆகியவைகளால் தாக்கினராம்.

### வழக்கு

இது குறித்து பிச்சை போலீசில் புகார் தாக்கல் செய்திருக்கிறார். வழக்கை பதிவு செய்து போலீசார் புலன் விசாரணை செய்து வருகின்றனர்.

## உ. பி. முதல்வராக

# பகுகுணா ஒருமனதாக தேர்வு

லக்னோ, நவ. 7—உத்தரப் பிரதேச மாநில புதிய முதல்வராக எச். என். பகுகுணா இன்று ஒருமனதாகத் தேர்ந்தெடுக்கப்பட்டார்.

இன்று உ. பி. மாநில சட்டசபை புது காங்கிரஸ் கட்சிக் கூட்டத்தில் இத்தேர்தல் நடந்தது. சட்டசபை புது காங்கிரஸ் கட்சியின் புதிய தலைவராக அதாவது முதல்வராக பகுகுணா தேர்ந்தெடுக்கப்பட்டார்.

புதிய முதல்வராக பகுகுணா தேர்ந்தெடுக்கப்பட்டுள்ள செய்தி அடங்கிய கடிதம் இன்று கவர்னர் அக்பர் அலிகானிடம் அளிக்கப்பட்டது.

புதியமந்திரிசபை அமைக்க பகுகுணாவை கவர்னர் அழைப்பார் என்று எதிர்பார்க்கப்படுகிறது.

உத்தரப்பிரதேச மாநிலத்தில் தற்போது கவர்னர் ஆட்சி அமுலில் உள்ளது.

புதிய முதல்வராகத் தேர்ந்தெடுக்கப்பட்டுள்ள பகுகுணா இப்போது மத்திய மந்திரியாக இருக்கிறார். மத்திய மந்திரி பதவியை அவர் விரைவில் ராஜிநாமா செய்வார்.

# "ஏழைக்காக பாடுபடும் தலைவர்": காமராஜருக்கு மத்திய மந்திரி பாராட்டு

புவனேஸ்வர், நவ. 7—"பழைய காங்கிரஸ் கட்சியில் ஏழைகளுக்காகப் பாடுபடும் ஒரே தலைவர் காமராஜரே" என்று மத்திய உள்துறை மந்திரி உமாசங்கர் தீட்சித் பாராட்டியுள்ளார்.

"இந்த விஷயத்தில் எங்களுடைய கொள்கைக்கும் அவருடைய கொள்கைக்கும் இடையே வித்தியாசமில்லை" என்றும் உமாசங்கர் தீட்சித் கூறினார்.

"எங்களில் சிலர் காமராஜரின் கருத்துகள் மீது பெரும் மரியாதை வைத்திருக்கிறோம்" என்றும் அவர் சொன்னார்.

புவனேஸ்வர் நகரிலிருந்து டெல்லிக்குக் கிளம்புமுன்னர் நிருபர்களிடம் பேசுகையில் அவர் இவ்வாறு கூறினார்.

### இணைப்பு எப்படி?

இணைப்பு பற்றியும் அவரிடம் நிருபர்கள் கேட்டனர். அதற்கு அவர் பதிலளிக்கையில் "புது காங்கிரஸ் கட்சியில் காமராஜ் மட்டுமே சேருவாரா அல்லது தமிழ்நாடு பழைய காங்கிரஸ் கட்சி பூராவும் சேருமா என்பது பற்றிக் கூறுவது கடினம். இப்படி நிகழலாம் அல்லது நிகழாமலும் இருக்கலாம்" என்று கூறினார்.

(4ம் பத்தி தொடர்ச்சி)

தள்ள பரிந்துரைப்படியும், கழக சட்ட திட்டம் விதி 32—பிரிவு 13ன் படி கோவை செழியன் இன்று முதல் கழகத்தின் சாதாரண உறுப்பினர் பொறுப்பு உட்பட எல்லா பொறுப்புக்களிலிருந்தும், தற்காலிகமாக விலக்கி வைக்கப்பட்டுள்ளார் என்று நெடுஞ்செழியன் தனது அறிக்கையில் கூறியுள்ளார்.

நவமணி

(7—11—73) புதன்கிழமை (8—11—73)

## கைத்தறி நெசவாளர்

தமிழ்நாடு அரசு கைத்தறி நெசவாளருக்கு வழங்கிய கடன் ஒரு கோடி ரூபாயையும் திரும்ப வசூலிப்பதை இன்னும் ஆறு மாதத்திற்குத் தள்ளி வைப்பதை வரவேற்பதுடன் கைத்தறி நெசவாளரின் பிரச்னைக்கு நிரந்தரமாக தீர்வு காணவேண்டும் என விரும்புகிறோம்.

தமிழக அரசும், முதல்வரும், தொழில் அமைச்சரும் கூட்டுறவு அமைச்சரும் பலரும் தமிழ் நாட்டில் உள்ள கைத்தறியாளருக்கு நூல் வழங்க முழு அதிகாரம் வேண்டுமென்று மத்திய அரசை வற்புறுத்தி வருகின்றனர்.

தமிழ்நாடு எப்படி உணவு வகையில் தன்னிறைவு பெற்று பிற மாநிலங்களுக்கும் வழங்கும் வகையில் வளர்ந்துள்ளதோ அவ்வாறே அதன் நூற்பாலைகளும் தமிழ்நாட்டிலுள்ள எல்லா கைத்தறிகளுக்கும் கொடுத்த பின்னர் வெளியில் ஏற்றுமதி செய்யும் அளவிற்கு உற்பத்தி பெருக்கியுள்ளதை நாம் அறியும்.

ஆனால் தமிழ்நாட்டில் உள்ள எல்லா கைத்தறிகளுக்கும் நூல் வழங்க இயலாமைக்குக் காரணம் மத்திய அரசின் நூல் கட்டுப்பாடேயாகும்.

இதன்படி அவர்கள் எவ்வளவு சதவிகிதம் அனுமதிக்கிறார்களோ அவ்வளவு அளவு நூலை மட்டுமே தமிழக அரசு கைத்தறியாளருக்கு வழங்க முடியும்.

உணவு வகையில் எப்படி நமக்கு வேண்டியது போக பாக்கியை வெளியே அனுப்ப இயலுகிறதோ அவ்வாறே நூல் வினியோகத்திலும் தமிழக அரசுக்கு அதிகாரம் வேண்டுமென்று தமிழக அரசு போராடுவது நியாயமாகும்.

அவ்வாறே வேட்டியும் புடவையும் கைத்தறிக்கே ஒதுக்க வேண்டும் என்றும் தமிழக அரசு போராடி வருகிறது. தமிழ்நாட்டில் உள்ள கைத்தறியாளர்களின் பிரச்னை உண்மையிலேயே எளிதாகத் தீர்க்கப்படக்கூடியது. தமிழ்நாட்டில் உள்ள நூற்பாலைகளின் நூல் கைத்தறிகளின் தேவைக்குப் போக மிக அதிகமாக மிஞ்சும்.

இந்த உண்மையைப் பொறுப்புடைய அரசியல் தலைவர்கள் உள்ளவாறு எடுத்துக்கூறி, பொது மக்களையும் புரிந்துக் கொள்ளச் செய்து, மத்திய அரசும் தமிழக அரசின் நியாயமான கோரிக்கையை ஏற்க செய்யல் வேண்டும் என வேண்டுகிறோம்.

# எம். ஜி. ஆர். ஆணிவேர் காளிமுத்து சல்லிவேர்: மனோகரன் வர்ணனை

இராமநாதபுரம், நவ. 7—அண்ணா தி. மு. க. வின் ஆணிவேர் எம். ஜி. ஆர். என்றும் காளிமுத்து எம். எல். ஏ. சல்லிவேர் என்றும் நாஞ்சில் மனோகரன் எம். பி. வர்ணித்தார்.

"திண்டுக்கல்லில் தி. மு. க. என்ற குதிரையின் கால் ஒடிக்கப்பட்டது. இனிவரும் தேர்தலிலும் மற்றக் கால்களும் ஒடிக்கப்படும்" என்றும் மனோகரன் ஆவேசமாகக் கூறினார்.

இராமநாதபுர மாவட்டம் கீழக்கரையில் நடந்த அதிமுக. பொதுக் கூட்டத்தில் மனோகரன் பேசியதாவது:—

எம் ஜி ஆர் தான் இயக்கத்தின் தலைநாயகர், எவனும் அதை மறுக்கமுடியாது.

ஆனால் இயக்கத்தை எம் ஜி ஆர் ஒருவர் தான் வழி நடத்துவதாகக் கருணாநிதி தப்புக் கணக்குப் போடுகிறார். தமிழகத்து நாலரைக்கோடி மக்களும் அதைத் தங்கள் இதயத்தில் ஏற்று வழி நடத்துகிறார்கள் என்பதை இருட்டில் நடமாடிக் கொண்டிருக்கும் குருட்டுப் புத்தி படைத்தவர்களுக்கு நான் தெரிவித்துக் கொள்கிறேன்.

### கங்கணம்

எம். ஜி ஆர் மெயின் கட்சி அதை அணைத்துவிட வேண்டுமென்று அவர்கள் கங்கணம் கட்டிக் கொண்டிருக்கிறார்கள்; கட்டுரைகள் தீட்டுகிறார்கள்.

நான் மறந்து விடவில்லை—ஆணிவேரை வெட்ட வேண்டும்; சல்லி வேர்களைக் கில்லி எறியவேண்டும் என்பதாக எழுதியவர்கள் தான் அவர்கள்

### ஆணிவேர் சல்லிவேர்

எம். ஜி ஆர்—ஆணிவேர்! நான், காளிமுத்து அன்பழகன் போன்றவர்கள் சல்லிவேர்கள்—அவர்கள் கணிக்கிறார்கள்.

எங்களை வீழ்த்தியதற்குப் பிறகுதான் எங்கள் குருதியை நக்கிக் குடித்ததற்குப் பின்புதான்—எங்கள் குலநாயகன் எம் ஜி ஆர் என்ற சத்தியத் தாயின் தவப்புதல்வனின் பக்கம் எவனும் போகமுடியும் என்பதை மாத்திரம் இங்கே நான் சொல்லிக் கொள்வேன்.

### காமராஜர் பக்தவத்சலம்

இதை நான் சொல்லக் காரணம் என்னைக் குறி பார்த்தவர்கள் அவர்கள். 20, 25 பேர்களை ஏவிவிட்டவர்கள் தான் அவர்கள்.

காமராசர்; பக்தவத்சலம் இவர்கள் இருவருமே தமிழகத்தை ஆண்டபோது பிரசினைக்குரியவர்களாக இருந்தவர்கள்; பக்தவத்சலம் மாணவர்களை பட்சிகளைப்போல சுட்டுப் பொசுக்கியவர். அவர்கள் இருவரையும் நல்லவர்களாக்கிய பெருமை கருணாநிதிக்கு உண்டு.

### காலை ஒடிப்போம்

திண்டுக்கல்லில் கருணாநிதி கட்சிக் குதிரையின் கால் ஒடிக்கப்பட்டது. இனிவரும் இடைத் தேர்தல் ஒவ்வொன்றிலும் மீதமிருக்கும் கால்கள் ஒடிக்கப்படும்.

அதன்பின் வரும் பொதுத் தேர்தலில் அந்தக் குதிரை ஓடாது படுத்து விடும்.

இவ்வாறு மனோகரன் பேசினார்.

(7ம் பக்தி தொடர்ச்சி)

பட்ட அல்லது கட்டப்பட்டு வரும் திட்டங்கள் மொத்தம் 70 ஆகும். இந்திய நாட்டின் மொத்த உருக்கு உற்பத்தியில் 30 சதத்தையும் எண்ணெய் உற்பத்தியில் 50 சதத்திற்கு மேலும் மின் கருவிகள் உற்பத்தியில் 60 சதத்தையும் கனரக எந்திர உற்பத்தியில் 85 சதத்தையும் உற்பத்தி செய்வது, சோவியத் உதவியுடன் கட்டப்பட்டுள்ள திட்டங்களே. இவை தவிர, ராஜஸ்தான், மைசூர், கேரளா, பஞ்சாப் மாநிலங்களில் சோவியத் உதவியுடன் அரசாங்க விவசாய பண்ணைகளும் நிறுவப்பட்டுள்ளன. கடந்த 20 ஆண்டு காலத்தில் இரு நாடுகளுக்குமிடையே ஆன வர்த்தகம் 30 மடங்கிற்கும் மேல் உயர்ந்துள்ளது.

### தன்னிறைவுப் பாதையில்

பொருளாதாரத் தன்னிறைவுப் பாதையில் இந்தியாவின் முன்னேற்றத்திற்கு, சோவியத் பொருளாதார ஒத்துழைப்பு கணிசமான பங்காற்றியிருப்பது அனைவராலும் ஏற்றுக் கொள்ளப்பட்டுள்ளது. இந்திய நாட்டின் சுதந்தர தேசியப் பொருளாதார வளர்ச்சிக்கு உத்தரவாதமாக அமைந்துள்ள பொதுத் துறைக்குச் சோவியத் உதவி கணிசமானதாகும்.

பொருளாதார ரீதியாகவும் அரசியல் ரீதியாகவும், ஏகாதிபத்தியத்தின் வற்புறுத்தல்களும், அத்துமீறல்களும் ஏற்பட்ட போதெல்லாம், அவற்றை எதிர்த்து வெற்றி காண சோவியத்-இந்திய ஒத்துழைப்பு உதவியுள்ளது. இந்தியாவுடனான உறவுகளில் ஏகாதிபத்திய சக்திகள் சில சலுகைகளைத் தரவேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டது; ஜவாஹர்லால் நேருவினால் உருவாக்கப்பட்ட, ஏகாதிபத்திய எதிர்ப்பு உள்ளடக்கத்தைக் கொண்ட சுதந்திரமான, கூட்டு சேரா அயலகக் கொள்கையை இந்தியா பின்பற்றி வருவதற்கும் சோவியத் இந்திய ஒத்துழைப்பு காரணமாக இருந்துள்ளது. அத்தகைய கொள்கையின் மூலம், உலக சமாதானத்திற்கும், சர்வதேச பதட்டநிலைத் தணிவுக்கும் இந்தியா அரிய பங்காற்றியுள்ளது. வேறுபல நாடுகள், சுதந்திர அயலகக் கொள்கையைக் கடைப்பிடிப்பதற்கும் அது ஊக்கமளித்துள்ளது.

இதன் விளைவாக சோவியத் யூனியனுக்கு என்ன லாபம்? பரஸ்பரம் பயனுள்ள சோவியத்-இந்திய ஒத்துழைப்பு, சோவியத்யூனியனுக்கும் சாதகமாக இருப்பதுடன், சமாதான இலட்சியத்தை இந்தியா ஆதரிப்பதால், சோவியத் யூனியனது சமாதான அயலகக் கொள்கை வலுப்படுகிறது.

இதன் காரணமாக, இரு நாட்டு மக்களுக்குமிடையே நட்புறவும், நல்லெண்ணமும், பரஸ்பர நம்பிக்கையும் ஓங்கி உயர்ந்து வளர்ந்துள்ளது.

அத்தகைய உறவின் பயனாகவே சோவியத்—இந்திய நட்புறவு, ஒத்துழைப்பு ஒப்பந்தம் பிறந்தது, இந்தியத் துணைக் கண்டத்திற்கு மிக நெருக்கடியான தொரு கால கட்டத்தில் தோன்றிய அந்த ஒப்பந்தம், ஏற்பட்டிராத போதலில் அயலார் தலையீட்டைத் தடுத்து நிறுத்தியது. பங்காளதேஷ் மக்களின் தேச விடுதலையில் அந்த ஒப்பந்தம் மிக முக்கியமான பங்காற்றியுள்ளது.

எனினும் 1971-ம் ஆண்டு தோன்றிய சூழ்நிலைகளை மட்டும் கருத்தில் கொண்டு சோவியத்-இந்திய ஒப்பந்தத்தின் முக்கியத்துவத்தைக் குறைத்து மதிப்பிட்டு விட முடியாது. நீண்ட கால அம்சங்களையும், வரலாற்றுத் தேவைகளையும் கருத்தில் கொண்டே ஒப்பந்தம் ஏற்பட்டுள்ளது.

ஒப்பந்தத்தில் கூறப்பட்டுள்ள உன்னதமான கோட்பாடுகளும், உயரிய நோக்கங்களும், அதில் அடங்கியுள்ள சமாதான, ஒத்துழைப்பு உணர்வும், மாபெரும் இரு சமாதான விழைவுள்ள நாடுகளின் மகத்தான பாரம்பரியத்தையும், அபிலாஷைகளையும் பிரதிபலிக்கும் ஒரு சீரிய தஸ்தாவேஜாக அதனை ஆக்கியுள்ளது.

சர்வதேச நிலையில் சாதகமான மாற்றங்கள் பல ஏற்பட்டுள்ளபோது, சோவியத்-இந்திய ஒத்துழைப்பு அதன் வளர்ச்சியில் புதியதொரு கட்டத்தை எட்டியுள்ளது. சர்வதேச அரங்கில் சமாதான சக்திகளின் நிலை வலுப்பட்டிருப்பதன் விளைவாக ஏற்பட்டுள்ள முன்னேற்றமே அது.

சோவியத்-இந்திய ஒத்துழைப்பு, உலக அரசியலில் மிக முக்கியமான பங்காற்றும் என்பது உறுதி. ஆசியக்கூட்டுப் பாதுகாப்பை நோக்கி ஆசிய நாடுகள் செல்வதற்கும் அவற்றிடையே உறவுகள் அமைவதற்கும், சோவியத இந்திய—சமாதான, நட்புறவு, ஒத்துழைப்பு ஒப்பந்தத்தின் கோட்பாடுகள் சிறந்த எடுத்துக் காட்டாகத் திகழ்கின்றன.

### நியூயார்க் பருத்தி மார்க்கெட்

நியூயார்க், நவ. 7— தேர்தல் தினத்தையொட்டி இன்று பருத்தி மார்க்கெட் மூடப்பட்டிருந்தது.

## மாபெரும் அக்டோபர் சோஷலிச புரட்சியின் 56-வது ஆண்டு விழா

### உலக அமைதி

சோவியத் கம்யூனிஸ்ட் கட்சியின் பொதுச் செயலாளர் லியனித் பிரஷ்னேவ் நவம்பர் 26-ல் இந்தியாவுக்கு விஜயம் செய்வார். அவரது விஜயம் உலக சமாதானத்தின் வளர்ச்சிக்கு மேலும் பங்காற்றும் என்பது உறுதி. சோவியத்—இந்திய நட்புறவும் பயனுள்ள ஒத்துழைப்பும் சமாதானம் மற்றும் முற்போக்குச் சக்திகளை வலுப்படுத்தும் ஆற்றல்வாய்ந்தவை என்று நம்மிரு நாடுகளும் எப்பொழுதும் கருதி வந்துள்ளன.

சோவியத் தலைவர்களின் ஆக்கபூர்வமான அயல்துறை நடவடிக்கைகள் மிக முக்கியமாக, லியனித் பிரஷ்னேவின் அமைதிக்கு, மேற்கு ஜெர்மன்,

ஜி. செவர்ஸ்கி

பிரெஞ்சு விஜயங்கள், மேலைநாட்டுத் தலைவர்களோடு அவர் நடத்திய உரையாடல்கள் இவற்றின் விளைவாக, சென்ற சில ஆண்டுகளில் உலக அரங்கில் சமாதானம், ஜனநாயகம், சமுதாய முன்னேற்றம் ஆகியவற்றின் வளர்ச்சிக்கு உகந்த, ஆக்கபூர்வமான மாற்றங்கள் ஏற்பட்டுள்ளன.

உலகில் இன்று ஏற்பட்டுள்ள அநுகூலமான மாற்றங்களுக்கு, இந்தியாவின் ஏகாதிபத்திய எதிர்ப்புக் கொள்கையும், அமைதி விரும்பும் கொள்கையும், முக்கிய பங்காற்றியுள்ளன. வியத்நாம் போரை முடிவுக்குக் கொண்டுவரவும், மத்திய கிழக்கு நெருக்கடிக்கு ஒரு நியாயமான தீர்வு காணவும், அரபு மக்களின் உரிமைகளைப் பாதுகாக்கவும், இந்திய அரசு செயலூக்கத்துடன் பணியாற்றியுள்ளது. இந்தியத் துணைக்கண்டச் சூழ்நிலையைச் சுமுகமாக்குவதற்கு இந்திய அரசும், இந்தியாவின் முற்போக்கு, ஜனநாயக சக்திகளும் எடுத்துவரும் முயற்சிகளைச் சோவியத் மக்கள் மிக உயர்வாக மதிக்கின்றனர்.

சோவியத் யூனியனின் பெரும்பான்மைப் பகுதிகள் ஆசியாவில் உள்ளன. சோவியத் மக்கள், மாபெரும் ஆசிய குடும்பத்தின் உறுப்பினர்கள்! பரஸ்பர மரியாதை, சமாதான ஒத்துழைப்பு என்ற கோட்பாடுகளின் அடிப்படையில், இந்தக் குடும்பத்தின் எல்லா உறுப்பினர்களும் உறவுகொண்டிருக்கவேண்டும் என்று சோவியத் மக்கள் விரும்புகிறார்கள். தெற்கிலும் கிழக்கிலுமுள்ள பல அண்டை நாடுகளோடு சோவியத் யூனியன் கொண்டுள்ள உறவுகள் இதற்கு ஒரு சிறந்த எடுத்துக்காட்டாகும்.

நாடுகளிடையேயுள்ள உறவுகளில் வன்முறையைப் பயன்படுத்தாதிருத்தல், சுயாதீனத்தை மதித்தல், எல்லைகளின் உறுதிப்பாடு, உள்விவகாரங்களில் குறுக்கிடாதிருத்தல், பொருளாதார ஒத்துழைப்பை விரிவுபடுத்துதல் என்ற அடிப்படையில் ஆசியாவில் ஒரு கூட்டுப் பந்தோபஸ்து அமைப்பு நிறுவப்படவேண்டும் என்று சோவியத் யூனியன் கருதுகிறது. இந்தக் கோட்பாடுகள் புதியவை அல்ல: வரலாற்றுப் புகழ்பெற்ற பாந்துங் பிரகடனத்தில், அவற்றுள் பல அடங்கியுள்ளன! தனிப்பட்ட ஆசிய நாடுகளிடையேயுள்ள உறவுகள் சம்பந்தமான தஸ்தாவேஜுகளில்; இணைய கோட்பாடுகள் அடங்கியுள்ளன. சமாதான சகவாழ்வு இன்றைய எதார்த்தமாக விளங்கவேண்டும் எனில்; சமாதானம் விரும்பும் எல்லா நாடுகளும் மக்களும் மிக நெருக்கமாக ஒத்துழைக்கவேண்டும்.

### ஆசியாவில் கூட்டுப் பந்தோபஸ்து

இது தொடர்பாக, சோவியத் யூனியனுக்கும் இந்தியாவுக்கும் இடையேயுள்ள ஒத்துழைப்பு, மிக முக்கியமானதாகும், ஏகாதிபத்தியத்தையும் ஆக்கிரமிப்பையும் ஒடுக்குமுறையையும் எதிர்த்தல், சமாதானத்தையும் சமுதாய முன்னேற்றத்தையும் பாதுகாத்தல் என்ற அடிப்படையில் வளர்ந்து வரும் இந்திய—சோவியத் ஒத்துழைப்பு! மிகவும் குறிப்பிடத்தக்கதாகும்.

லியனித் பிரஷ்னேவின் வருகையின் மூலம் இந்த ஒத்துழைப்பு மேலும் வலுப்பெறும்! புதிய கட்டத்திற்கு வளர்ந்தோங்கும். இது சோவியத், இந்திய மக்களுக்கு மட்டுமன்றி, அனைத்து ஆசிய மக்களுக்கும், உலக மக்களுக்கும், மிக முக்கியமானதாகும்.

### சமாதான இலட்சியம்

சோவியத்—இந்திய ஒத்துழைப்பிற்கான அரசியல் அஸ்திவாரம் என்ன? ஏகாதிபத்திய ஆதிக்க கால எச்சமிச்சங்களை இந்திய நாட்டிலிருந்து அறவே துடைத்தெறிந்து அந்நாட்டின் முன்னேற்றத்தை உறுதிப்படுத்துவதும், சர்வதேச சமாதானம்; பந்தோபஸ்து ஆகியவற்றை வலுப்படுத்துவதுமேயாகும். இந்தியாவுக்கும், சோவியத் யூனியனுக்குமிடையே, அரசியல் சமூக அமைப்புகளில் எவ்வளவு வேறுபாடுகளிருந்தபோதும், இரு நாடுகளது ஜீவாதார நலன்களுக்கு ஏற்ற குறிக்கோள்களாகும் அவை.

சோவியத்—இந்திய உறவுகளின் வளர்ச்சியில், பொருளாதார ஒத்துழைப்பு அரியதொரு பங்கினை ஆற்றியுள்ளது. சோவியத் உதவியுடன் இந்தியாவில் கட்டி முடிக்கப்

— இ. என். கொமரோவ் —
எம். எஸ்ஸி (வரலாறு)

(3-ம் பக்தி பார்க்க)

கன்னடத் தலைவர்

# எம். எல். ஏ. பதவியை இழந்தார்: தமிழர்களை மிரட்டியதன் விளைவு

பெங்களூர், நவ. 7—கர்நாடக மாநில சட்டசபைக்கு வாட்டாள் நாகராஜ் தேர்ந்தெடுக்கப்பட்டது செல்லாது என்று ஐகோர்ட்டில் தீர்ப்பு கூறப்பட்டது. தமிழர்களை மிரட்டி நோட்டீஸ் வெளியிட்டதே இதற்கு காரணம்.

கர்நாடக மாநில சட்டசபைக்கு கடந்த ஆண்டு நடந்த பொதுத் தேர்தலில் பெங்களூரில் உள்ள சாம்ராஜ் பேட்டை தொகுதியில் வாட்டாள் நாகராஜ் போட்டியிட்டார். கன்னடர் சங்கத்தின் வேட்பாளராக இவர் தேர்தலில் நின்றார்.

இவரை எதிர்த்து இ. காங்கிரஸ் வேட்பாளர் தயானந்த சாகர் போட்டியிட்டார். தேர்தலில் வாட்டாள் நாகராஜ் வெற்றி பெற்றார்.

### தேர்தல் ஊழல்

தோல்வி அடைந்த தயானந்த சாகர் பெங்களூர் ஐகோர்ட்டில் வழக்கு தொடர்ந்தார். தேர்தலின்போது வாட்டாள் நாகராஜ் பல ஊழல்கள் செய்ததாகவும், அகவே அவருடைய தேர்தலை ரத்து செய்துவிட்டு தான் வெற்றி பெற்றதாக அறிவிக்கவேண்டும் என்று தயானந்த சாகர் மனுவில் குறிப்பிட்டிருந்தார்.

இந்த வழக்கில் நேற்று தீர்ப்பு கூறப்பட்டது.

### 6 ஆண்டு காலம் போட்டியிட கூடாது

எம். எல். ஏ. பதவிக்கு வாட்டாள் நாகராஜ் தேர்ந்தெடுக்கப்பட்டது செல்லாது என்று நீதிபதி தீர்ப்பில் கூறினார்.

மேலும் தீர்ப்பில் கூறியதாவது:—

தேர்தலின்போது வாட்டாள நாகராஜ் ஊழல் செய்தார் என்பது நிரூபிக்கப்பட்டு விட்டது. ஆகவே, அவர் தேர்தல் செல்லாது.

சாம்ராஜ் பேட்டைத் தொகுதியில் போட்டியிட்ட இந்திரா காங்கிரஸ் வேட்பாளர் தயானந்தசாகர் வெற்றி பெற்றதாக அறிவிக்கப்படுகிறது.

"இன்னும் 6 ஆண்டு காலத்திற்கு மாநில சட்டசபை, மேல்சபைக்கோ, பாராளுமன்றத்திற்கோ வாட்டாள் நாகராஜ் போட்டியிடக் கூடாது."

### தமிழர்களை மிரட்டினார்

வாட்டாள் நாகராஜ் வெளியிட்ட அறிக்கையில் தமிழர்களை மிரட்டியிருக்கிறார். தமிழர்கள் தனக்கு ஓட்டுப் போடாவிட்டால் பெரும் கெடுதல் ஏற்படும் என்று மிரட்டி இருக்கிறார்.

கன்னடர்—தமிழர் என்ற பிரச்சனை கிளப்பி விரோதத்தை வளர்த்திருக்கிறார். தமிழ் மொழி பேசுகிறவர்களை பயமுறுத்தி இருக்கிறார். ஒருவரின அடிப்படை உரிமையை பாதிப்பதாகும்.

### ரூ. 10 ஆயிரம்

சட்டசபை தேர்தலுக்கு ரூ. 10 ஆயிரத்திற்குமேல் செலவிடக்கூடாது என்று சட்டத்தில் விதி இருக்கிறது. ஆனால் வாட்டாள் நாகராஜ் ரூ 24 ஆயிரத்து 18 செலவழித்திருக்கிறார்.

எதிர்த்து போட்டியிட்டவரை பற்றி தனிப்பட்ட முறையில் தாக்கி நோட்டீஸ் வெளியிட்டிருக்கிறார்.

இவ்வாறு தீர்ப்பில் கூறப்பட்டுள்ளது. இந்த வழக்கில் 49 சாட்சிகள் விசாரிக்கப்பட்டார்கள்.

### வாலாஜாபாத் பஸ்

சென்னை, நவ. 7—பல்லவன் போக்குவரத்தின் தடம் எண் 76F. மார்க்கத்தில் செல்லும் பேருந்து நேற்றிலிருந்து சென்னை (பிராட்வே) பேருந்து நிலையத்திலிருந்து வாலாஜாபாதிற்கு சைதாப்பேட்டை வழியாக இயங்கும்.

# வங்கியில் மோசடி: தண்டனை பெற்றவரின் அப்பீல் தள்ளுபடி

சென்னை, நவ. 7—சென்னை வங்கி ஒன்றில் மோசடி செய்ததாக தண்டனை விதிக்கப்பட்டவரின் அப்பீல் மனு நேற்று சென்னை ஹைகோர்ட்டில் தள்ளுபடி செய்யப்பட்டது.

சென்னை வங்கி ஒன்றில் கிருஷ்ணாபுரத்தைச் சேர்ந்த காமாட்சி அம்மாள், 'பிக்சட் டிபாசிட்'டாக சேமித்து வைத்திருந்த 16 ஆயிரம் ரூபாயை மோசடி செய்ததாக அந்த அம்மாளின் உறவினர் சி. ஜே. பிரசாத் மீது வழக்குப் போடப்பட்டிருந்தது. சென்னை முதலாவது அடிஷனல் செஷன்ஸ் நீதிபதி இந்த வழக்கை விசாரித்து பிரசாத்துக்கு 2 வருட கடுங்காவல் தண்டனை விதித்திருந்தார். அந்த தண்டனையை ஆட்சேபித்து சென்னை ஹைகோர்ட்டில், சி. ஜே. பிரசாத சார்பாக அப்பீல் மனு போடப்பட்டு இருந்தது.

சி. ஜே. பிரசாத் எஸ். எஸ். எல். சி. வகுப்பு தேறியவர். வேலையில்லாமலிருந்து வந்தார்.

வங்கியில் போடப்பட்ட தொகைக்கான வட்டியை மட்டும் பெற பிரசாதுக்கு காமாட்சி அம்மாள் அதிகாரம் அளித்திருந்ததாகவும், ஆனால் கள்ளக்கையெழுத்து போட்டு, 16,000 ரூபாய் பணம் முழுவதையுமே வங்கியிலிருந்து பிரசாத் பெற்றுக் கொண்டதாகவும் கூறப்படுகிறது.

பிரசாத்தின் அப்பீல் மனுவை சென்னை ஹைகோர்ட் நீதிபதி கிருஷ்ணசாமி ரெட்டி விசாரித்து அதைத் தள்ளுபடி செய்து தீர்ப்பு கூறினார்.

